THE HON. SRI R. VENKATARAMAN : இந்த மாதிரியுள்ள விஷயங்களுக்கு அவர்களிடமிருந்து சர்க்காருக்கு கோரிக்கை வராமல் இருக்கும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் நினைத்தார்களா என்னவென்று தெரியவில்லை. கோரிக்கை வந்திருக்கிறது. சர்க்கார் அதை பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது.

SRI S NAGARAJA MONIGAR : இப்போதுள்ள சம்பளம், படி இவைகளுக்கு போதிய கண்டக்டர்கள், ட்ரைவர்கள் கிடைக்கிறார்களா ? அப்படி கிடைக்காத சந்தர்ப்பங்கள் இதுவரையில் ஏற்பட்டிருக்கின்றனவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கிறது என்ற காரணத்திற்காகக் குறைவான சம்பளம் கொடுப்பது என்பது சரியல்ல.

SRI T. S. RAMASWAMY PILLAI : May I know the pay scales and dearness allowance given to the drivers and conductors in the Kanyakumari district, if the Government have the information in their possession?

THE HON. SRI R. VENKATARAMAN : Permanent drivers get a pay scale of Rs. 50—3—65—4—85 (E.B.) 5—110. Temporary drivers are given Rs. 40—2—50 (E.B.) 3—80. Permanent conductors are paid in the scale of Rs. 35—3—65 (E.B.) 3—80 and temporary conductors get Rs. 35—3—65.

SRI T. T. DANIEL : Is it a fact that many of the conductors, drivers, and checking inspectors in the Kanyakumari district are graduates and graduates in law?

THE HON. SRI R. VENKATARAMAN : That is so, Sir.

*Cycle, Match Factories*

* 108 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழிலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவில் சைக்கிள் தொழிற்சாலையும், தீக்குச்சித் தொழிற்சாலையும் ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ? அது இப்போது எந் நிலையில் இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir. It is proposed to start a cycle assembly unit in the Tanjore district. Sanction of financial assistance from the Government of India is awaited.

The establishment of a match factory on industrial co-operative basis in the Tanjore district has been sanctioned in February 1958. The Society was registered in March 1958 and preliminary arrangements are being made to start the factory.

SRI A. VEDARATHNAM : இந்தத் தொழிற் சாலைகளில் எவ்வளவு பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது ? இந்தத் தொழிற்சாலைகள் எங்கெங்கே ஏற்படுத்தப்படப்போகின்றன ? ஆரம்பிக்கப்படப்போகும் சைக்கிள் தொழிற்சாலையில் " அஸெம்பிளி " மட்டும் நடக்குமா, அல்லது சைக்கிள் உறுப்புகள் செய்வதும் மேற்கொள்ளப்பட்டு நடக்குமா ? இவைகள் எப்போது துவக்கப்படும் ?

11th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : சைக்கிள் தொழிற்சாலையைப் பொறுத்த அளவில், அஸெம்பிளி யூனிட் தான் வைக்கப்படும். அதாவது பல பாகங்களைக் கொண்டு வந்து சைக்கிளாகச் செய்யும் யூனிட் வைக்கப்படும். அதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து பொருளுதவி கேட்டிருக்கிறோம். அது கிடைத்தவுடன் ஆரம்பிக்கப்படும். அதிலே எவ்வளவு பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்று இப்போது சொல்வதற்கில்லை. ஏனென்றால், இந்த ராஜ்யத்தில் இந்த மாதிரி 3 யூனிட்டுகள் ஆரம்பிக்கவிருக்கின்றன. ஒவ்வொன்றிலும் 6,000 சைக்கிள்கள் செய்யலாம் என்ற யோசனை இருக்கிறது. ஆகவே அதைச் செய்து பார்க்கும்போதுதான் எத்தனை பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்று சொல்ல முடியும். தீப்பெட்டித் தொழிற்சாலையைப் பொறுத்த மட்டில், அதை பட்டுக்கோட்டையில் வைக்கப் போகிறார்கள். அதற்கான இடம் வாங்கப்பட்டிருக்கிறது. கட்டிடம் கட்டும் வேலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஸார், இந்த சைக்கிள் தொழிற்சாலைக்கு மத்திய சர்க்காரிடமிருந்து கோரிய மான்யத் தொகை எவ்வளவு என்று அறிவிக்கலாமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ரூ. 5,63,000.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, தற்போது நடைபெற்று வருகிற டி. ஐ. சைக்கிள் கம்பெனியாவது மக்களுடைய தேவைக்கேற்ப சப்ளை செய்ய முடியாத நிலையில் இருக்கிறது. அப்படி தேவைக்கேற்ப சப்ளை செய்ய முடியாததற்கு, போதிய அளவு இறக்குமதி கிடைக்க வில்லை என்று சொல்வது உண்மையா ? இந்த நிலைமையை சீர் செய்ய சர்க்கார் முயற்சிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நம் நாட்டில் சைக்கிள்கள் தேவை அதிகரித்துக்கொண்டே போகின்றது. தற்போது டி. ஐ. சைக்கிள் கம்பெனி உற்பத்திசெய்வது போதவில்லை யென்பது உண்மை. அதற்குக் காரணம் இறக்குமதி அனுமதிக்காதது என்று சொல்வதற்கில்லை. அதற்குப் பல கராணங்கள் இருக்கின்றன. அவற்றில் இதுவும் ஒன்றாக இருக்கலாம்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : அந்த மூன்று யூனிட்டுகள் எந்தெந்த இடங்களில் ஆரம்பிக்கப்படவிருக்கின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒன்று தஞ்சையில், ஒன்று வேலூரில், மற்றொன்றைப்பற்றி இப்போது எனக்குஞாபகம் இல்லை.

SRI V. SANKARAN : தஞ்சையைத் தேர்ந்தெடுத்ததின் காரணம் என்ன ? இந்தத் தொழிற்சாலையை அங்கு வைப்பதற்கான அனுகூலங்கள் இருக்கின்றன என்ற காரணத்திற்காகவா அந்த இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன ?

THE HON. SRI R. VENKATARAMAN : சிறு தொழிற்சாலைகளை பரவலாக வைக்கப்படவேண்டுமென்ற கொள்கை அடிப்படையில் இவைகள் வைக்கப்படுகின்றன.

### *Iron ore*

* 115 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any representation was received by the Government recently regarding the existence of iron ore deposits in Thalakundram village in the South Arcot district and Mausurabad in the North Arcot district;